

ஸ்ரீ

# தேவிகாலோத்தரம்

## ஞானசார விசார படலம்





திருவண்ணாமலையில் வீற்றிருக்கும்

**ஸ்ரீ ரமண மஹர்ஷிகளால்**

சுலோகத்திற்கோர் வெண்பாவாக

எழுதப்பட்டு






திருவண்ணாமலை

ஸ்ரீரமணீயவாணி புஸ்தகாலயத்தாரால்

பிரசுரிக்கப்பட்டது.

ஸ்ரீ

# தேவிகாலோத்தரம்

ஞானாசார விசார படலம்.

மூலம்.

இஃது

திருவண்ணாமலையில் வீற்றிருக்கும்

## ஸ்ரீ ரமண மஹர்ஷிகளால்

சுலோகத்திற்கோர் வெண்பாவாக

எழுதப்பட்டு,

ஸ்ரீரமணீயவாணி புஸ்தகாலயத்தாரால்


சென்னை

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

[இரண்டாம்பதிப்பு.]

---

ருத்ரோத்காரி௵ தை௴

# அவதாரிகை.

---

^உபாகமங்களு ளொன்ருய ‘ஸ்ரீ தேவிகாலோத்தர’த்தின்கண் சகலாகம சாரத்தின் சாரமாய்ப் பக்குவான்மாக்கள் பரிபாக காலாநந்தர மடையத்தகுந்த ஞானத்தையும் ஆசாரத்தையும் விவரித்துப்பரமசிவன் பரமசிவைக் கருளிச் செய்த இந்த ஞானுசார விசார படலந் கிரந்தமானது சனன மாணரூப சம்சார துக்க சமுத்திரத்தில் வீழ்ந்து முங்கிப் பொங்கித் தத்தளிக்குஞ் சீவர்களைத் தாங்கி நேர்வழி கொடு போய் முத்தியெனு மக்கரையிற் சேர்க்கும் அரும் பெருந் தோணியா யிருத்தலின் முமுட்சுக்க ளனைவருந் திகைத்து வழிதப்பி யலையாம லிதனைப் பின்பற்றி நேர் மார்க்கமே சென்று அச்சாந்தானந்த பரமபத மடைவாராக.

---

91/1

ஸ்ரீ

# தேவிகாலோத்தரம்.

## ஞானசார விசார படலம்.



### மங்கலம்.

*தேவன் றிருவாயாற் றேவி செவிபுகட்டுந்*
*தேவிகா லோத்தரந் தேர்ஞானத்—தேவிளையு*
*மானந்த வானமுத மானவரு ளத்துவித*
*மோனக் கரியகமே முன்.*

### தேவி:—

1. *அனைவர்க்கு மேமுத்திக் காகவம் முத்தி*
*யணைமார்க் கதரிசன மாகு—மனையபர*
*ஞானமா சாரமே நாடுமெனக் குன்னருளால்*
*வானவ ரீசா வழுத்து.*

### ஈசன்:—

2. *யாதினுல் ஞானியர்கள் யாதோர் களங்கமுமி*
*லோதரிய முத்திதனை யுற்றிடுவார்—மாதரசே!*
*ஞானவா சாரங்க ளுனக்கின் றுரைப்பன்*
*ஞானமுற யாவருமே நன்கு.*

3. ஞானந்தான் யாவர்க்கு நன்முகத்தோ யிக்கால
ஞானத்தா லுள்ளி னணுகாதோ—வான
கணக்கிலாக் கோடிநூல் கற்ருலு மன்னோர்க்
குணர்வுதியா தென்றே யுணர்.

4. அதனாலே நிர்ப்பயனா யையமென லின்றி
யெதனிலுமே யிச்சை யிலனு—யிதயத்தி
னற்சிரத்தை யோடு நிராகுலனாய் ஞானத்தி
லுற்சாக முள்ளோனு யுற்று.

5. மமதையின் றிக்கருணை மன்னிப்பூ தங்க
டமக்கெல்லா மேயபயந் தந்து—முமுட்சுவா
யோகத்திற் றற்பரனு யோதிக்கா லோத்தரத்தி
னேகவழி நிற்க விசைந்து.

6. அவன்றனே நான்முகனு மச்சிவனு மாலு
மவனிந் திரன்குகனு மாவ—னவனே
யகிலதே வர்குருவு மாவன்மா யோகி
யகில தபோதனனு மாம்.

7. பண்டிதனு மாபுருடன் பாரமார்த் தப்பேறு
கொண்டவனு மன்னவனே கூறுங்கால்—மண்டியுழல்
வாயுசமஞ் சித்தம் வலித்தெவனு னிச்சல
மாயிருத்தப் பெற்றிடு மாம்.

8. அதுதானே முத்திக் குபாய மதுவே
சதுபாயத் தார்சற் குணங்க—ளதுவே
பிரஞ்ஞை திரத்தன்மை பின்னு மதுவே
தருமம் விவேகியர்க்குத் தான்.

9. அதுவேநற் றீர்த்த மதுவேயாந் தான
மதுவே தவமாகு மைய—மிதிலில்லை
யெவ்வுபா யத்தினு லேவாயு விற்சலன
விவ்வுளங்கட் டப்படுமோ வெண்.

10. சித்தஞ் சிறிதசையச் சம்சார நிச்சலமாச்
சித்தநிலை நிற்கமுத்தி சித்தமிது—சித்தந்
திரமாக்க வேவேண்டு மாதலினுற் றீமான்
பரமாம் பிரஞ்ஞையினுற் பார்.

11. அந்தவே காந்தத் தடையுஞ் சுகமதுவே
யந்தமிலா வத்தியந்த வானந்த—மெந்தக்
கருமமுமி லப்பாரத்திற் கற்றவனு மார்தா
னிரமித் திடானீ யிசை.

12. விடயஞா னம்போய் விரிநிட் களநிர்
விடயஞா னம்விடான் வீடு—மடைய
வவாவிலனே னுந்தீர னட்சயமா மோட்சந்
தவாதுற் றிடுவனே தான்.

13. இருக்கின்றே னென்கலையோ டேய்ந்தசை தன்ய
வுருசத்தி யத்தா லொளிரும்—பிரபஞ்சஞ்
சத்தித் தியானந்தான் சாற்றுஞ்சர் வாலம்ப
மற்றதுவே நிட்களஞா னம்.

14. அத்துவித மாகி யறிவொளி மாத்திரமா
யெத்து மகமமிசத் தெச்சூன்ய—முத்திக்கு
வித்ததுவே யென்று விளம்பும் பரயோக
வர்த்தகமு மேயது வாய்.

15. சக்கரங்க ளாடிகள் சார்பதும தேவதை
யக்கர மண்டலமூர்த் தாதியா—மிக்கவிவை
யோர்போது மற்பமுமே யுன்னி யிடத்தகா
நேர்மார்க்க மாமிதனை நீத்து.

16. கும்பகமு நானுவா குஞ்சருவ மந்திர
மும்பிரா ணயாம'மூன்றா—ணம்பகர்ந்த
வத்தனையு மாசரிக்க வேண்டுவதி லட்சயமா
முத்தியிச்சை யுள்ளோர் முயன்று.

17. பூசை வணக்கம் புரிசெபந்தி யானமு
மாசரிப்ப தேதுமே யங்கில்லை—பேசுமது
கேவலம் ஞேயமென்று கேளினிக் கிஞ்சிலன்ய
மாவறிய வேண்டுவதின் றாம்.

18. வெளிவிடயம் பற்றும் விரிமனத்தார்க் கென்றும்
விளையும் வெகுபந்த வேது—வெளியே
திரியுஞ்சித் தத்தைத் திருப்பநிலை யுற்றே
யொருதுனிமே வாருலகி லோர்.

19. உள்வெளிமேல் கீழ்நடுதிக் கோர்சிறிது மின்றியே
வுள்ளவுரு வெல்லாமா யோருருவு—மில்லதாய்த்
தான்றனக்கே வேத்தியமாய்த் தானே யிலங்கிடுமாற்
பூன்றமா மொன்று புணர்.

20. எவ்வெதன் றிட்டியா லெவ்வுயிர்செய் யுந்தொழில்க
ளவ்வுயிர்க் கக்கதியுண் டாதலா—லெவ்வ
மறாவவை சாரா தயல்திட்டி யற்றுள்
நிராலோகந் தானே நினை.

21. எதுபல னில்கரும மில்லை சுபாவத்தி
லோது மிவையாவு முண்மையல—பேத
வுலகமு மில்லை யுலகப்பற் றுள்ள
விலௌகிகன் றானு மிலை.

22. நிராலம்ப மிந்த நிகிலமு மன்றி
நிராலம்பத் தாலொளிரா நிற்ப—நிராலம்ப
மாகச்செய் திந்த வனைத்து நிராலம்ப
மாகிடுவ னென்றே யறி.

23. வியோமவடி வாகும் வியாபகமா சூன்ய
மியாதொரு வன்பா வியானே—லியாண்டுமவன்
பீசகோ சக்கிருமி போலப் பிரபஞ்சத்
தேசமு சாரியா மே.

24. அகிலமாம் யோனியிலு மாருயிர்யா விற்கு
மிகக்கிலே சம்பொருந்து மேன்மே—லகிலக்
கிலேசமுமே நீக்குதற்குக் கேள்மாசூன் யத்தை
யிலேசமறுச் சிந்தை யியற்று.

25. ஞானவுற்பத் திப்பொருட்டே நற்கிரி யைசரியை
யோநவிலப் பட்டதா மென்றறிந்—தானவிவை
விட்டேச்சா லம்பயோ தத்தையும் விட்டென்றும்
நிட்பிரபஞ் சத்தை நினை.

26. பாதலமுன் பாகப் பகர்சத்தி யந்தமா
வாதரப் பட்டவிவை யத்தனையும்—வீதலுறுஞ்
சூனியமா மத்திரங்கொண் டாராலே சூரரவர்
சூனிய ஞானியராச் சுட்டு.

27. விடயத்தி லாசை விடாச்சித்தத் தைமர்க்
கடத்திற் சலிக்குங் கருத்தை—மடக்கிச்
சருவசூன் யப்பதத்திற் ரூபிக்க வத்தா
னிருவாண முற்றிடுவே னே.

28. அகிலதத்து வத்து மபின்னமா யாக
மகமெனுமி தற்கனிய மாகி—யகமெய்ப்
பொருளிதற்க பின்னமாம் பூரணசித் தெங்கும்
பொருந்து மகமுள் பொருள்.

29. ஆகாயம் போல வகிலத் தகம்புறமு
மேகாங்க மாயுருவ மின்றியதா—மாகாப
ரானந்தந் தன்னை யறிந்தவர்க ளன்பேயவ
வானந்தந் தானுவ ரால்.

30. இந்தனமில் லாவெரிதா னெவ்வண்ணந் தான்றானே
மந்தமாய்ச் சாந்தியினை மன்னுமோ—வந்தவிதம்
பற்றுபொரு ளற்றாற் பரந்தமன முஞ்சாந்தி
யுற்றுவிடுந் தானாக வோய்ந்து.

31. மோகிகை மாயையு மூர்ச்சிகை சொப்பன
மாகிய விஞ்ஞான் கவத்தையோ—டேக
சுழுத்தியுஞ் சாக்கிரஞ் சொல்லுமிவை யெல்லா
மொழித்துவிட வேண்டு முணர்.

32. தேகமிதிற் சூக்குமமாச் சேருயிர் சித்தபுத்தி
யாகுமகங் காரமிவை யாவுக்கு—மேகசித்
தன்னியமே யென்றுசிந்தை யாற்றவே யச்சித்தை
மன்னிடுவா னென்று மதி.

33. நித்திரையி ஞலு நினைவாதி யாலுநிதஞ்
சித்தந்தான் மூடமிகச் சேழியுஞ்—சித்தமிதை
யெத்தனத் தாலறிவித் தேகாமற் றன்னிலையில்
வைத்திடுவாய் மேன்மேலும் வை.

34. சித்தமெப் போது திரமாகு மெவ்விதத்து
மத்தைச் சலிப்பித்த லாகாதே—யித்தனையுஞ்
சிந்திக்க வேண்டுவதி லாங்கேயச் சித்தத்தைப்
பந்தித்து நிச்சலமே பண்ணு.

35. ஆசிரயம் பற்றியதா மச்சித்த மங்ஙனமே
யாசிரய மின்றியதா யாக்கிடுக—வாசிரயத்
திற்சலன நிச்சலமாச் செய்தேயந் நிச்சலத்
தைச்சலிக்கச் செய்திடா தை.

36. இவ்வெல்லாப் பூத விலயமுண் டாகிலிவற்
றெவ்வெவ்விண் ணும்விமல மேபோல—வவ்வவ்
வுருவம்வி யாபித்து மோர்மலமி றன்னைப்
பொருவி தியானம் புரி.

37. அதுவே சனன மடைந்ததன் பேரு
மதுதானே பாண்டித்ய மாகு—மெதுதான்
சலனமுறும் வாயு சமஞ்சித்தத் தைநிச்
சலமாத் தரிக்குஞ் சதா.

38. சித்தத்தை மேலேயுந் தாரணஞ் செய்யற்க
மத்தியிலுங் கீழினு மற்றெங்குஞ்—சித்தமீ
தந்தரங்க பாவனைவிட் டாசிரய மின்றியதாச்
சந்ததமுஞ் செய்திடவே தான்.

39. உறக்கத்தி னின்று முணர்த்திடுக சித்த
முறிற்சலனம் பின்ன ரொடுக்கா—யுறக்க
மலைவென்னு மிவ்விரண்டு மற்றநிலை யுற்றா
னிலையிதனி னிச்சலமா நில்.

40. ஆசிரய மின்றியதா யச்சித்தந் தானென்று
மேசருவா லம்பனமும் விட்டதாய்ப்—பாச
மனவவத்தை மன்னிடா மைஞேய முத்தி
யினதிலக்க ணந்தா னிது.

41. ஆலம்ப மெல்லா மறவிட்டே யம்மனத்தை
யேலத் தரிப்பித் திதயத்தே—சால
விளக்கமாத் தோன்றுமறி வேதவ் வறிவின்
பழக்கம் விடாது பயில்.

42. அப்பரமாஞ் சூனியத்தை யார்தியா னித்தேயவ்
வப்யாச தற்பரரா யாவரோ—தப்பார்
பிறப்பிறப்பில் லாத பெருமையுறுந் தான
முறப்பெறுவ ரேயவரென் றோர்.

43. தேவருந் தேவியரு மங்ஙனமே யன்னியமாம்
பாவபுண்ணி யந்தற் பலன்களு—மேவியிடு
மாசிரய மாசிரய ஞானமுமே யானவிவை
மாசமு சாரபந்த மாம்.

44. தொந்தமென் றாசிரயஞ் சொல்லப் படுமாமத்
தொந்தம் விடப்பாந் தோன்றுமே—பந்தமில்சீ
வன்முத்த னப்போது மாயோகி யாகம்விட்
டன்றே விதேகமுத்த னும்.

45. உடலைவை ராக்யத் தொழித்திடுகை புத்தி
யுடையவராற் செய்ய வொணுதே—யுடலிதனை
யாரம்பித் துள்ளவினை யற்றவுட னிவ்வுடல
பாரந்தா னேயகலும் பார்.

46. இதயகம லத்தே யகமுருவா மெச்சித்
தநுநிமல நிச்சலமே யாகு—முதிக்கு
மகங்கார நிக்குதலா லச்சித்தே முத்தி
சுகமளிப்ப தென்று துணி.

47. சருவ வுபாதியுஞ் சாரா துளசித்
துருவ மெதுவொன் றுளது—நிரந்தா
மந்தச் சிவோகமென் றன்பொடுதி யானித்தே
யுன்றனு சத்தியெலா மோட்டு.

48. தேசமுஞ் சாதிமுத லாமிவற்றைச் சேர்ந்தனவு
மாசகல்வர் ஞசிரம மன்னினவும்—பேசுமிப்
பாவனைக ளையகற்றிப் பற்றியே தன்னிலையின்
பாவனையே யென்றும் பழகு.

49 ஒருவனு னெற்குரிய ஞேரொருவ னில்மற்
ெருருவற்கில் யானு முரிய—ஞெருவ
னெவற்குரியன் யானவனைக் கண்டில னேயெற்
கெவனுரியன் கண்டிலே னே.

50. நானே பரப்பிரம நாதனுல குக்கீச
ஞனுவிங் நிச்சய மார்புருடன்—ரூனேநல்
முத்தனு மன்றி முரண்வழியிற் செல்புருடன்
பெத்தனு மென்றுநீ பேண்.

51. என்ெருருவன் றேக மிலனுக வேதன்னைத்
தன்ஞானக் கண்ணினுற் றுன்காண்ப—னன்றே
யனைத்தினு மாசை யறவிட்டுச் சாந்தி
யினைத்துன் னினவனு மே.

52. அசனீச னென்றெல்லா நூற்களிலு மார்தா
னிசைக்கப் படுவானே வென்று—மசரீர
ஞங்குணமில் லானுன்மா வாமவனே யான்சிறிது
மீங்கிதனி லைய மிலை.

53. விஞ்ஞான மாத்ரன் விசுத்தன் விமுத்தனு
னெஞ்ஞான்று மெங்கு மிருப்பனு—னஞ்ஞாயத்
தொன்றலனுன் பற்றவிட வொண்ணுனுன்றுக்கமிலா
னென்றும் பிரமமய னே.

54. உச்சி முதலுள்ளங் காலளவா யுட்புறம்
பிச்சருமப் போர்வை யிறுதியா—யச்சித்
தருபூன்ற மாமமிர்த மாமனிய வான்மா
வதுசுத சித்தமே யாம்.

55. இந்தச் சராசரங்கட் கீசனுன் றுயுடனே
தந்தையுந் தந்தைக்குத் தந்தையுஞ்—சிந்தனங்கொண்
டத்துரிய நற்பத மாமெனையே சிந்திப்பார்
முத்தி விருப்ப முளார்.

56. பிரமன்முன் னுந்தேவர் பின்னரர்நா கர்கந்
தருவரியக் கர்சுரவே சையர்—நிரையாலும்
யாகம் பலவாலும் யான்பூச் சியனெனையே
யாரும்பூ சித்திடுவ ரால்.

57. அருந்தவங்க டான மனேகவிதத் தாலு
மருச்சிப்ப ரென்னையே யாரும்—பரந்த
சரவசர பூதங்கள் சார்ந்துளமற் றெல்லா
மொருவனும் யானே யுணர்.

58. தூலனுஞ் சூக்குமன் சூனியனு மல்லனுன்
ஞாலத்தின் பந்துயான் ஞானமயன்—மேலு
நிரந்தரனீ சன்விமல னீடவத்தை யில்லோன்
பிரபஞ்ச மில்லனுன் பின்.

59. அனுதிவிஞ் ஞான மசன்மம்பு ராணந்
தனுதித யக்குகைய தாகி—யெநாளு
முருவமுல கங்களங்க மொப்புபற்றேன் றின்றிக்
கருதக்கா ணக்கொளப்போ காது.

60. சனுதனமா யந்தரமில் சற்பிரமஞ் சோக
மெனுநீ யடிக்கடிபா ரேகம்—பனுமெவன்
பாவித்து நிச்சலனு நிற்பன் பரப்பிரம
மாவமுதத் தன்மையுறு வான்.

61. ஞானமிவ் வாறு நவின்றிடப் பட்டதா
லானமுத்தி யாரு மடைதற்கு—மானினியின்
ருசார மென்னு லருளப் படுமிதுகே
ணீசாவ தானமா நின்று.

62. நீராட லுஞ்செபமு நித்தியவோ மம்பூசை
பாரங்கி காரியமுன் பாங்கருமமோர்சா
தனமுமே யன்னேன் றனக்கென்று மில்லை
யெனவறிம கேசிநீ யின்று.

63. நேம முஞ் சேத்திரத்தி னிற்பீடத் திற்சேவை
யாம்பிதிரர் காரியமோ டர்ச்சனை—யேமற்றுந்
தீர்த்தால் யாத்திரை தீர்விர தங்களுமே
யோர்த்திடவற் கில்லையா மொன்று.

64. தருமா தருமந் தருபல னில்லை
வருநிதியி லௌகிக மாகுங்—கருமமிலை
யெல்லாக் கரும மிகந்திடுல காசார
மெல்லா விதத்து மிக.

65. சமயவா சாரமே சற்றுமின்றித் தள்ளாய்
சமத்தகரு மங்களும்பந் தத்தி—னமையுமாற்
சங்கற்ப மும்விகற்பஞ் சாதிதரு மஞ்சார்ந்த
சங்கத்தை யுந்தூரத் தள்ளு.

66. பலவிதமாஞ் சித்தியும் பாதாள முன்பா
யுளவிர சாயன முந்தா—னுலகிற்
பிரத்தியட்ச மாகவே பெற்றாலும் பற்ற
லொருவுகவே சாதக னுள்.

67. இவையாவும் பந்தகமா மிச்சீவ னுக்கே
யிவைபின்னுந் தாழ்ந்தநெறி யீவ—விவைக
ளியாவையினு மப்பரம முத்திசுக மில்லை
வியாபகமாஞ் சித்துருவம் விட்டு.

68. எவ்வகைவி சேடத்து மெல்லா வவத்தையினுந்
தவ்வலின்றி யோகந் தரித்தோனு—யெவ்விதத்து
மையத்தாற் சேத்திரபீ டத்தெழுங்கு தூகலத்
தையகற்றி நின்றிடு வாய்.

69. கிருமிகீ டம்பறவை கேள்சதியே தாரு
வுருமுத லெல்லா வுயிர்க—ளொருபோது
நாசமுறச் செய்யவொண ணல்லறிஞ னுண்மையறி
வாசிரயித் தோனு யறி.

70. வேரொது வும்பிடுங்க வேண்டா மிலையினையும்
வேறு படுத்திட வேண்டாமே—யோருயிர்க்கு
மேதுன்ப முண்டுபண்ண வேண்டா மலர்களுமெ
ஞுதரவாய்க் கிள்ளவேண் டாம்.

71. சுயமாக வேயுதிர்ந் துள்ளமலர் கொண்டே
செயக்கடவன் பூசை சிவனுக்—கியற்றிடு
மாரணமுச் சாடனமுன் மற்றவித்து வேடணமும்
பேருற்ற தம்பனமும் பின்.

72. சுரமொடுபூ தக்கிரகந் துன்னுமா வேச
முறுவசிய மாகருட மோக—முரைத்தவிக்
குத்திரகர் மங்கள் குயிற்றற்க கல்விற்காட்
டத்திற்பூ சித்தலு டன்.

73. சேத்திர பீடத்துந் தேவதை யின்பொருட்
டாத்தரு முத்திரையு டன்மகமு—நீத்துமுன்
செய்யவற்றின் வாதனைகள் தீர்த்தேவி யாபகமா
மெய்யறிவு தன்னையே மேவு.

74. சமத்துவ மேயுற்றுச் சாராம லாசை
சமனாய் சுகதுக்கச் சார்விற்—சமனாகி
மித்திரர்க ளல்லாதார் மேலுமோட் டிற்காஞ்ச
னத்திற் சமவறிவ னாய்.

75. பொறிவிட யத்திலெப் போதும் விருப்ப
முறும்படி செய்ய வொணாதா—னிருமமனா
யாசையெலா மற்றென்று மான்மாவி லேரமிப்பன்
மாசிலா யோகி மதி.

76. சமனாகி நிந்தையிற் சாற்றுதுதி யிற்பின்
சமனாகிச் சர்வபூ தத்துஞ்—சமதிட்டி
மன்னிடவே வேண்டுமால் மாறும லெந்நாளுந்
தன்னைப்போன் மன்னுயிரிற் றான்.

77. ஒருவுகவி வாத முடனுலக கோட்டி
யொருவுக வேகலக மும்பின்—னொருவுக
சாத்திர கோட்டியைச் சாற்றுவன தீயனவு
மேத்துநன்மை யாயினவு மே.

78. ஈரிடையுங் கோளு மிடம்ப மிராகமுஞ்
சாருமம் மாச்சரியந் தானும்பின்—னேரிடு
மாசையுங் கோபமு மச்சமுஞ் சோகமு
நீசருவ மெல்லமெல்ல நீக்கு.

79. தொந்த மனைத்துந் தொடரா தகற்றியே
சந்தத முஞ்சனத்தைச் சாராதா—னிந்த
வுடம்புடனே யெல்லா முணர்ந்திடுவா னுமித்
திடம்பெறவொ ளிர்ந்திடுவன் றேர்.

80. ஞானத்தி னாலேயே நன்முத்தி யங்ஙனமே
யேனைய சித்திபய னில்லனவா—மேனுமப்
போகத்துஞ் சித்தியினும் பூண்டிடு வாரிச்சை
சாதகரா யுள்ளவர்க டாம்.

81. அணிமாதி யானகுணச் சார்வுண்டா னாலு
மணுகாம லேயிருந் தாலு—முணர்ந்தே
விமலமா மப்பதியை வீடுறுத றப்பா
தமலமாந் தேகி யறி.

82. ஆகந்தா னைம்பூத வாகார மங்கேயே
யேகசிவன் றானு மினிதமர்வன்—பாகமிலா
தெங்கு முறுசிவமுன் னித்தரையீ ருமுலகஞ்
சங்கரன் றன்னுருவந் தான்.

83. இவ்வறிரு னைக்கண் டெவர்காண மூன்றானுந்
திவ்வியகந் தம்புட்பந் தீங்கனிகள்—செவ்வியதாந்
தூபதீ பாடல் துணியுண்டி யாதியீந்
தேபணிந் தேத்திடுவ ரே.

84. அப்படியே வீடுறுவ ராருயிரே யம்முத்தி
யிற்படியு மார்க்கத்தி லிச்சையுளா—ரப்புருட
னைத்துதிப்பார் நித்திப்பா ரன்னோர்தம் புண்ணியபா
வத்தினையு முற்றிடு வார்.

85. அறிவுடனு சாரமெவை யாசிக்கப் பட்ட
தறிவிக்கப் பட்டதெனு லந்த—நெறியாவுங்
காலஞா னந்தான் கருத்தில்வே றேவினவற்
பால தெது மாதேபகர்.

இங்ஙன மிருபத்து நான்காயிரங் கிரந்த மிசைந்த
ஸ்ரீதேவிகாலோத்தர மென்னும் ஞான காண்டத்தின்கண்
னைட்டிகர்க்கு ஞானசார விசாரமென்னும்
அறுபத்தைந்தாம் படலம்
சம்பூர்ணம்.

